உள் நாட்டிற்கு
வருட சந்தா ரூபா 3.

219

வெளி நாட்டிற்கு
வருட சந்தா ரூபா 4.

ஆசிரியர்:
யாழ்ப்பாணம்
தென்கோவை.
ச. கந்தையபிள்ளை
தமிழ்ப் பண்டிதர்,
சிலோன்

RÉPUBLIQUE FRANÇAISE
LIBERTÉ—EGALITÉ—FRATERNITÉ

VITTAGAM

LE REDACTEUR
TENKOVAI
S. CANDIAH PILLAI
Tamil Pandit
Jaffna
CEYLON.

JOURNAL HEBDOMADAIRE PARAISSANT LE JEUDI

# வித்தகம்

வியாழக்கிழமை தோறும் வெளிவருவது.

Bureau de la Direction :—
RUE D'AMBALATADOU AYER
MADAM, NO. 2,
Pondichéry.

நத்தம்போற் கேடு முளதாகுஞ் சாக்காடும்
வித்தகர்க் கல்லா லரிது.
குறள்.

காரியாலயம் :—
அம்பலத்தாடு ஐயர் மடத்து வீதி,
நெம் 2,
புதுவை.

VOL. III. புதுவை, தாது ஹ ஆடி மீ ௨௩ (23—7—36) NO. 32.

## சுத்த சாதகம்.

இருளுறுபசுவதாய்நிற்குங்காலை
யிருளதுவாகியேநிகழும்
மருளுறுசீவனாய்நிற்குங்காலை
மருளதுவாகியேநிகழும்
தெருளுறுமோவின்முத்தனுங்காலைத்
தெருள்பிரணவமதாய்நிகழும்
அருளுறுபரமமுத்தனுங்காலை
யருளதாய்நிகழுமவ்வருளே.

இருளதுவாகிநிகழ்ந்திடுங்காலை
யிரும்பதியாகியேநிகழும்
மருளதுவாகிநிகழ்ந்திடுங்காலை
மகபரமாகியேநிகழும்
தெருள்பிரணவமாய்நிகழ்ந்திடுங்காலைச்
சிவலிங்கமாகியேநிகழும்
அருளதுவாகிநிகழ்ந்திடுங்காலை
யச்சிவமாகுமச்சிவமே.

உ
திருவருள் துணை.




காலமுண் டாகவே காதல்செய்
துய்மின் கருதரிய
ஞாலமுண் டானொடு நான்முகன்
வானவர் நண்ணரிய
ஆலமுண் டானெங்கள் பாண்டிப்
பிரான்றன் அடியவர்க்கு
மூலபண் டாரம் வழங்குகின்
றுன்வந்து முந்துமினே.
[திருவாசகம்]

வித்தகம்

புதுவை
தாது ஸு ஆடி மீ கூ உ

## கான் முளைப் பெருக்கம்.



அமல நாதங்கள் உடலகத்து ஆக்க முற்று ஒங்குதலாகிய கான் முளைப் பெருக்கத்தால் அசுத்த நிறை கலக்குற்றுச் சாதலுறாச் சாதலடைய,

அமல வடிவம் பெற்று நித்தியத்துவம் அடைந்த சித்தர் பெருமானுகிய எமது இடைக்காடர் திருவாய் மலர்ந்தருளிய,

மூவடி முப்பது என்னும் அரிய பெரிய தமிழ் மறையில் அறக்கூறு என்னும் மூன்றாவது அத்தியாயத்தில் ஏழாம் சூக்த மகுடமாகி மிளிர்வது "கான் முளைப் பெருக்கம்" என்பது.

இதற்கு முந்திய சூக்த மகுடமாகிய "போலிப் புற மொழி" என்பது "வித்தகம்" தொகுதி 3 இல. 31 இல் ஷெ சூக்தம் நுதலியவாறு ஒரு சிறிது விளக்கிக் கூறப்பட்டது.

அதனோடு தொடர்புடைய "கான் முளைப் பெருக்கம்" என்பதன் பண்பும் பயனும் ஈண்டு ஒரு சிறிது விளக்கிக் கூறப்படும்.

வாயு ரூபமான நாதம் பிருதிவி தத்துவமாகிய உடலில் தன் சலிப்பை இறக்கும் எனவும், அவ்வாறு கலத்தலால் உணர்ச்சி ஓக்கம் பெற்றுச் சடத்துவம் வாய்ந்த அப் பிருதிவி தத்துவம் உணர்ச்சிமயமாதற்கு ஏற்றவாறு அவ் உணர்ச்சியை விளக்கும் எனவும்,

பிரவிருத்தி நெறியில் யாத்திரை புரிதலால் இளைப்புற்றுச் சோர்வடையும் சீவர் நிவிர்த்தி நெறி நாடி ஊக்க மடையுமாறு ஓவாது ஒலித்து நின்று அச் சீவருக்கு உரனைப் புகுத்தி உற்ற துணைவனுய் இயங்கும் எனவும்,

ஆதலால் உடலகத்துப் பிரிவின்றி ஓவாது ஒலித்துக் கொண்டே இருக்கும் அத்தகைய நாதங்களைப் போற்றுதல் நன்று எனவும்,

"போலிப் புற மொழி"

என்னும் மேலைச் சூக்தத்தால் கூறிப் போந்த புலவர் பெருமான்,

"கான் முளைப் பெருக்கம்"

என்னும் இச் சூக்தத்தால், அத்தகைய நாதங்களால் தூலச் சிவையாகிய உடல் அமலம் பெறுவான் முறையால் கட்டுண்டு அதனல் ஆக்க முறும் பையாப்புக்களின் பண்பும் பயனும் இனைய எனக் கூறியருளுகின்றார் என அறிதற்பாற்று.

### மூவடி முப்பது.

———

அறக்கூறு 3.

கான் முளைப் பெருக்கம்-சூக்தம். 7.

ஏவ விடம்பொரு ளிணங்கா துளைதலி
னின்றே ளிளைப்புற் றழுந்தலின் மன்பதை
யோய்ந்துவலி மழுங்கவி னெரூஉம்
[வழக்கிதே.

என்பது சூக்தம்.

பிருதிவி தத்துவமாகிய உடலில் ஆக்க முற்று வாயு ரூபமான நாதங்களாகிய கான் முளைகளால் உடலுயிர்ப் பையாப்புற்றுச் சாதலுறாச் சாதலடையும் திறனை உணர்த்துதல் நுதலிற்று இச் சூக்தம் என்க.

கான் முளைப் பெருக்கம் என்றால் மக்கள் பலரைப் பெறுதல் எனவும்,

அம் மக்களை ஓம்புதற்கு ஏற்றவாறு வியமும் செய்யும் வைப்புக் (ஏவல், இடம், பொருள்) இன்றித் தலைவன் மனம் உளைதலாலும்,

மகவுயிர்த்த தாயர் உடல் நலம் குன்றிப் பிணியால் நலிந்து இளைப்புற்று ஒய்தலாலும்,

நிறை முறையில்லா இணை விழைச்சில் ஈடுபடுதலால் உலக மாக்கள் வீரியம் தளர்ந்து — விந்து பலமற்று உடல் உரம் குன்றி அறிவு ஆண்மைகள் ஒடுங்கப் பெறுதலாலும்,

இவ் வழக்குத் தவிர்தற் பாலது எனவும்,

உலகியலுக்கு ஒப்பியவாறு அத்தகைய படிப்பாளிகள் பொருள் காணும் படியும்,

உண்மையை நாடும் ஆற்றலுடையார் அதனைக் குருவருளால் அறிந்து உய்தியடையும் படியும் அமைக்கப் பட்டது இச் சூக்தம் என அறிதற் பாற்று.

இல்லற வாழ்வுக்குரிய சிற்றின்ப நுகர்ச்சியில் இச்சை காரணமாக நிறை முறையின்றி வரம்பு கடந்து ஒழுகுதலால் மக்கட் பேறு பெருக்கமடைகின்றது.

தலைவன் தலைவியர் இருவர்பாலும் அறிவோடு கூடிய இன்ப நுகர்ச்சி இல்வழி அவர் தம் கூட்டுறவின் பயனாகிய கான் முளைகளும் குறைபாடு உடையர்களே ஆவர்.

தம்பதிகள் அக் கான் முளைகளை ஓம்ப அறியாது—ஓம்புதற்குரிய ஏவல், இடம், பொருள் இணங்காமையால் இடர்ப்படுகின்றனர்.

இதனால் கான் முளைகளும் செல்லாத் தீ வாழ்க்கை உடையராய் நிலக்குப் பொறையாகின்றனர்.

பின் வரும் பெரியார் திருவாக்கும் நிறை முறை இல்லாச் சிறு வாழ்வினால் — கான் முளைப் பெருக்கத்தால் உளவாகும் துன்பங்களை நன்று புலப்படுத்துகின்றமை காண்க.

### பட்டினத்தார் பாடல்.

———

நாப்பிளக்கப் பொய்யுரைத்து நன்னிதியுந் [தேடி
நலமொன்று மறியாத நாரியரைக் கூடிப்
பூப்பிளக்க வருமேழைப் புற்றீசல் போலப்
புலபுலெனக் கலகலெனப் புதல்வர்களைப் [பெறுவீர்
காப்பதற்கும் வகையறியீர் கைவிடவு [மாட்டீர்
கவட்டுத்தோல் மரத்தினையிற் கானுழை [த்துக் கொண்டெ
ஆப்பதனை யசைத்துவிட்ட குரங்கதனைப் [போல
அகப்பட்டீர் கிடந்துழல அகப்பட் டீரே.

கிழத்தியானவள் கருவுயிர்த்து வறட் பூப்பு ஒட்டிப் பொலிப் பூப்பு ஆக்க மடையுங் காலங்களில் எல்லாம் நிறை முறை இல்லா இணை விழைச்சு ஓவாது நிகழ்ந்து கருத் தங்கப் பெற்று மக்கள் பலரைப் பெறுதலால் இளைப் புற்று உடல் நலம் குன்றிப் பிணியால் நலிகின்றனள்.

இதனால் மன்பதை—மனித சமூகம் வீரியம் தளர்ந்து உடல் உரம் குன்றி விரைவில் தென்புலக் கோமானுக்கு நல்விருந்தாகின்றது; வம்பு பழுத்து மாண்டு போகின்றது.

ஆதலால் இஃது ஒரூஉம் வழக்கு என்று கூறப்பட்டது.

[ஒருவுதல்—தவிர்தல்—நீங்குதல் - விலகல் எனப் பொருள் படும்.]

ஒரூஉம் வழக்கு என்பதற்கு சாதலடைதற் குரிய—வம்பு பழுத்து மாண்டு போதற்குரிய வழக்கு இது எனப் பொருள் கூறினும் ஆம். இஃது உலகியலுக்கு ஒப்பிய போலிப் பொருள்.

இனி, இச் சூக்தத்தின் உண்மைப் பொருள் தான் யாதோ? எனின், அஃது ஒரு சிறிது சுருங்க உரைக்கப் படும்.

1

இடம் பொருள் ஏவல் இணங்காது [உளைதலின்

2

ஈன்றோள் இளைப்புற்று அழுந்தலின்

3

மன்பதை ஓய்ந்து வலி மழுங்கலின்

இது ஒரூஉம் வழக்கு

அ

இடமும் பொருளுமாய் விளங்கும் உடலுயிர் அசுத்த நிறையின் ஆதிக்கத்தால் இணக்கமின்றி இயங்கி அதனால் நற் பயனை அடைதற்குரிய ஏவல் என்னும் ஆற்றல் இன்மையைப் பொருந்துதலால் உளைந்து இம் மாயாப் பிரபஞ்சத்தில் உழலுதலால்,

ஆ

அன்ன இழிவான நிலைமையைத் திருத்தி அமைப்பான் முயன்று குரு நெறி கடைப் பிடித்து ஒழுகும் மாணவனது தூலச் சிவையாகிய தாய் ஈன்ற கான் முளைகளாகிய நாதங்கள் ஆக்க முறும் முறையால் அத்தாயானவள் இளைப்புற்றுச் சுருங்கிச் சோர்வடைதலாலும்,

இ

தாதுக்களாகிய மன்பதை அசுத்தமான தங்கள் வலிமை குன்றி அசுத்த உணர்ச்சி மழுங்குதலாலும்,

நாதங்கள் ஆக்கமுறுதலாகிய கான் முளைப் பெருக்கம் என்பது மருளுடம்பினுள்ள அசுத்த நிறை கலக்குற்றுச் சாதலுறச் சாதலடைதற்குரிய சாதகம் என அறிதற்பாற்று.

மேல் இவ் உண்மைப் பொருள் சிறிது விளக்கமுற உரைக்கப் படும்.

கான் முளைப் பெருக்கம் என்றால் என்னை?

உலகியலில் கான் முளைகள் என்றால் மக்கள் என்பர்.

கால் என்றால் வழி எனப் பொருள் கண்டு கான் முளைகள் என்பதற்கு வழித் தோன்றல்கள் என்பர்.

கால் என்பது வாயு எனப் பொருள் படும். அது விந்துவில் ஆக்கமுறுவது. அவ் வாயுவால் ஆக்கமுறுவது சரீரம்.

சுக்கில சுரோணித காரியமாய் உள்ளவர்களை — முளைத்தவர்களை மக்கள்.

இவர்களே கான் முளைகள்.

விந்துவில் ஆக்க முறும். வாயுவின் அசைவே நாதம். அதுவே வேதம்.

"வேதத்தின் ஒத்த உடல்"

என்றனர் அண்ணர் திருமூலர்.

## திருமந்திரம்.

———

சித்தத்தி னுள்ளே சிறக்கின்ற நூல்களில்
உத்தம மாகவே யோதிய வேதத்தின்
ஒத்தி உடலையு முண்ணின்ற வுற்பத்தி
அத்த னெனக்கிங் கருளா லளித்ததே.

(ஷை திருமூலர் வரலாறு. செ. 12)

கால் என்னும் அசுத்தம் மலிந்த வாயுவினால் ஆக்கப்பட்டது இச் சரீரம். அவ் வாயுவினால் நிலை பெற்றிருப்பது இச் சரீரம். அவ் வாயு இன்மையால் அழிந்துபடுவது இச் சரீரம். வாயு என்னும் காற்றடைத்த பை எனப்படுவது இச் சரீரம். வாயு என்னும் வாசி அசுத்தம் நீங்கி வசப்படுதலால் அழிந்துபடாது நித்தியத்துவம் பெறுவது இச் சரீரம்.

இதுபற்றியே, "வேதத்தின் ஒத்த உடல்" எனப் பட்டது. இதனால் மக்கள் கால் முளைகள் எனப்படுவதின் உண்மை கண்டு கொள்க.

இச் சூக்த மகுடமாகிய "கான் முளைப் பெருக்கம்" என்பதில் "கால் முளை" என்பது நாதத்தையே குறித்ததாகும்.

விந்துவில் ஆக்கமுறும் வாயுவின் அசைவே நாதம் எனப்படுவது. அத்தகைய அமல நாதங்களின் ஆக்கமே— பெருக்கமே கான் முளைப் பெருக்கம் எனப்பட்டது.

சிறு வாழ்வு எனப்படும் சிற்றின்ப நுகர்ச்சியால் —கள வொழுக்கப் பயில்வுகளாகிய கந்தருவ வழக்கத்தால் விந்து தூய்மை யடையுங்கால் அதன்பால் ஆக்கமுறும் வாயுவின் அசைவே — இயக்கமே —அமல ஒலியே நாதம் எனப்படுவது.

கால் என்னும் வாயுவில் ஆக்கமுற்ற — முளைத்த நாதங்களே கான் முளைகள் எனப்பட்டன. இவற்றின் பெருக்கமே கான் முளைப் பெருக்கம் என்பது.

இவ்வாறு உடலகத்துக் கடையாயும் உள்ளாயும் விளங்கும் விந்துவில் உதிக்கும் நாதங்களாகிய இக் கான் முளைகளையே உடலாகிய தநுவில் வைத்து

"புதல்வர் எனும் எம்தநு"

என இருக்கு வேதம் முறையிடுவதாயிற்று எனவும் அறிதற்பாற்று.

பின் வரும் இருக்கு வேதப் பாடல்கள் இவ் வுண்மையை நன்று புலப்படுத்துவனவாகும்.

## இருக்கு.

———

அஷ்டகம் 2. அத்தியாயம் 6,
மண்டலம் 2, சூக்தம் 22.

உத்தமச் செல்வம் வேந்தே யுதவுக கரும
[சித்தம்
நத்து நற்பாக்கியத் தோடருந்தன நிறைவு
[மெங்கட்
கொத்த மெய்ப்புதல்வர் சேட்டினுடை
[வுருத்தன்மை வாக்கு
மெத்தவும் சுகத்தை யூட்டு நற்றினச்
[செறிவு மின்னே.

(இ—ள்) இந்திரனே! சிரேஷ்டமான செல்வத்தையும் கருமகுசலதையோடும் கூடிய மனத்தையும், சௌபாக்கியத்தையும் தன ஸ்மிருத்தியையும், எமது சரீரத்திற்றோன்றிய புத்திர பௌத்திரர்களுக்குக் கேடுறாத் தன்மையையும், நல்ல வாக்கையும், சுந்தரமான பகல்களோடு கூடிய நன்னாட்களையும் எங்களுக்குத் தருவாயாக (எ—று)

[இந்திரன் என்னும் சொல் 26 பெயர்களைக் குறிக்கின்ற தென்பது வேத முறையீடு. அவையாவன:— தகிக்ரா, வாயு, வருணன், ருத்திரன், இந்திரன், பர்ஜன்யன், பிரஹஸ்பதி, ப்ரஹ்மணஸ்பதி, க்ஷேத்ரபதி, ரிதன், வாஸ்தோஷ்பதி, வாசஸ்பதி, அதிதி, க, யமன், மித்ரன், விஸ்வகர்மன், ஸரஸ்வத், வேனன், மன்யு, அஸுநீதி, அபாம்நபாத், தாத்ரு, தார்க்ஷ்யன், புரூரவா, ம்ருத்யு என்பனவாம்.]

(ஷை ஷை சூக்தம். 23

உதவிகொடு துயரொழிவி ருகற்பதியே
[யெஞ் சார்பி னுரக்கப் பேசி
புதல்வரெனு மெந்தனுவைச் காப்பாற்று
[மெம்மவரு முன்னைப் போற்றால்
அழிவிரைவின் வரவழைப்போம் தேவர்
[களைப் பழிப்பவரையடையச் கொல்க
மதிபதனிற் கேடுடைத் தோருயர்ந்த
[சுகத்தமத்தை மருவா தேய்க

(இ—ள்) உன்னுடைய உதவிகளினால் பக்தர்களது துன்பத்தை ஒழிக்கும் பிரஹஸ்பதியே! எங்கள் பக்கமாகப் பரிந்து பேசுபவனும் புத்திர பௌத்திர ரூபமாயுள்ள எமது தநு அல்லது சரீரத்தைக் காப்பாற்றுபவனும் எம்முடையவனுமான உன்னை ஸ்தோத்திரங்களால் கூவி அழைப்போம். தேவ நிந்தகர்களை முற்றிலும் அழிப்பாயாக. துஷ்ட புத்தி படைத்தவர்கள் உத்கிருஷ்டமான சுகத்தை அடையாமல் இருக்கட்டும் (எ—று)

"இடம் பொருள் ஏவல் இணங்காது
[உளைதலின்"

உடலும் உயிரும் இடமும் பொருளுமாய் உள்ளன. இடமில்லாமல் பொருளில்லை. பொருள் இல்லாமல் இட மில்லை. விவகரிப்பதனால் இரண்டாகப் பேசப் படுகின்றன. இடம் பொருள், உடல் உயிர், சத்தி சிவம் என்பன ஒன்றே.

இடமும் பொருளுமாய் விளங்கும் உடலுயிர் இணக்க மின்றிப் பிணக்கினால் இயங்கி முரண்பட்டு அதனால் எவ்வித நன்மையும் அடைய முடி

யாது—நற் பயனை அடைதற் குரிய ஏவல் என்னும் ஆற்றலும் அமையப் பெறுது அதனல் உளைந்து உளைந்து செல்கின்றன—இம் மாயாப் பிரபஞ் சத்தில் உழல் கின்றன.

இன்ன கேவலமான— இழிவான— ஓர் கேடான நிலைமையைத் திருத்தி அமைக்கும்படி குரு வருளால் உரிய சாதகங்களைக் கைக்கொண்டு முயன்று ஒழுகும் மாணவன்,

தன் தூலத்துள் ஆக்க முற்ற— தூலத்தினின்று பிறந்த—தாய் என்னும் முறைபால் பிருதிவி தத்துவமாகிய தூலச்சிவை ஈன்ற நாதம் என்னும் சொல் அணு அணுவாக ஆக்க முற்று ஆரோகண கதியால் தன்னை ஈன்ற அத்தாயானவள் சுருங்கிச் சோர்வடையும் படி செய்கின்றது. அஃதாவது,

அசுத்த நிறையின் ஆதிக்கத்தால் பெருத்துத் தடித்திருந்த வியாப கத்தின் இயல்—விரிந்திருந்த வியாபக சொரூபமான தூலம் தன் அசுத்தமான பெருக்கத்தினின்று — விரிவினின்று சுருங்கி — குறுகி வரும் நிலைமையை அடையும் என்பதாம்.

''ஈன்றேள் இளைப்புற்று அழுந்தலின்''

என்பதன் பொருள் இதுவே ஆம்.

தாதுக்களாகிய மண்பதை தங்கள் வலிமை குன்றி — அசுத்தமான உணர்ச்சி மழுங்கி நிற்கும்.

திருவாசகம்.

———

''.....................
ஊன்கெட் டுயிர்கெட் டுணர்வுகெட் டு [என்உள்ளமும்போய்
நான்கெட்ட வாபாடி..... .............''

(ஷ திருத்தெள்ளேணம் செ. 18)

என்றனர் மணிவாசகப் பிரபு.

''மண்பதைஐயந்துவலிமழுங்கலின்''

என்பதன் பொருள் இதுவே ஆம்.

இந் நிலைமையினல் பெறப்படுவது யாது கொல்? எனின்,

அசுத்த நிறை சொரூபமானது தூலம் ஆதலால் கான் முளைகளாகிய அமல நாதங்கள் பெருக்கம் அடைய அடைய — அமலம் துளிர் பெற்று ஓங்க ஓங்க,

அவ் அசுத்த நிறை கலக்குற்றுச் சாதலுறச் சாதல் அடைவதன் பெட்பு இதுவே என அறிதற்பாற்றும்.

இது பற்றியே,

''ஒருஉம் வழக்கு இதே''

எனச் சூக்தத்துக்கு முற்றுத் தந்தனர் புலவர்.

ஒருவுதல் அசுத்த நிறை ஒழிதல் என்னும் பொருட்டு. அசுத்த நிறையின் ஒழிவே சாதலுறச்சாதலும் ஆம்.

கான் முளைகள் பெருக்க மடையவே —அமல நாதங்கள் பெருக்க மடையவே—அமல நிறை ஆக்க முறவே அசுத்த நிறைகேடடையும். இவ் இரு நிலைமையும் ஒருங்கே நிகழ்வன ஆதும். இதனல் உடலுயிர் சாதலுறச் சாதலடையும்.

குறள்.

———

நத்தம்போற் கேடு முளதாகுஞ் சாக்காடும் வித்தகர்க் கல்லால் அரிது.

(ஷ 24-ம்அதி. புகழ், செ.5)

என்னும் பொய்யில் புலவன் பொருளுரையின் பொருளும் இதுவே ஆம். (''வித்தகம்'' தொகுதி 1,இல.1,16,17 இல் காண்க.)

இத் தகைய சாதலுறச் சாதலடைதலால் உடலுயிர்முரண்பாடான இயக்கம் நீங்கி ஒழிவற ஒன்றி நிற்கும்.

இதனல் இரு வினை ஒப்பு மல பரிபாகம் சத்தி நிபாதம் என்பன கை கை கூடும்.

உடலுயிருக்கு ஏவல் என்னும் அளப்பில் ஆற்றல் — வாய்மையான ஆற்றல் உளதாகும்; பேரின்ப லாபம் கைகூடும். நித்தியத்துவம் உளதாகும்.

விரிப்பின் மிகப் பரக்கும் திறன் அமைந்த இச் சூக்தப் பொருள் ஒருவாறு சுருங்க உரைக்கப்பட்டது.

இது காறும் கூறியவைகளால் மூவடி முப்பது என்னும் அரிய பெரிய தமிழ் மறையில் அறக் கூறு என்னும் மூன்றுவது அத்தியாயத்தில் ஏழாம் சூக்த மகுடமாகிய 'கான் முளை பெருக்கம்'' என்பதன் பண்பும் பயனும் ஒருவாறு உணரத்தகும்.

சுபம்.

———

(8-ம் பக்கம் தொடர்ச்சி)

வித்தாய் இருக்கின்ற வினைகளில் — சஞ்சிதத்தில், எந்த வித்து மறு சென்மம் எடுப்பதற்குப் பக்குவம் பெற்றுள்ளதோ—எந்த நிறை பூர்த்தியாகி அநுபவிக்கப் பக்குவம் பெற்றிருக்கின்றதோ அந்த நிறைகளாகிய புற அக இயக்கங்கள் உடல் உயிர் என விளங்கும்.

இவ்வாறு நிகழுங்கால் முற் சென்மத்துக்கும் பிற் சென்மத்துக்கும் இடை வெளி — இடையீடு இல்லையோ எனின், உண்டு என்றே கூறுதல் வேண்டும். அதனைச் சிவமே அறியும். ஆன்மா அறியாது. அறிந்தால் சிவமாகும்.

இவைகளை யெல்லாம் பூரணமாக அறிவ தென்றால், ஒவ்வொரு தத்துவங்களையும் அடைந்தாலன்றி முடியாது. அறிந்தாலும் அறிந்துவிட்டதாக ஒருவர் சொல்வதும் இல்லை. சொன்னலும் அது போலியே.

(தொடரும்)

# ** ஒருதுறைக் கோவை. **

யாழ்ப்பாணம் புன்னாலைக்கட்டுவன்
## வித்துவான் ப்ரம்மஸ்ரீ. சி. கணேசையர்
அவர்கள் எழுதியது.

(தொகுதி. 3. 26. வாரத் தொடர்ச்சி)



"பால் வாய்ப் பசுந்தமிழ் வீசியவாசம் பரந்த வைகைக்
கால் வாய்த்த வீரையர் கோன்ரகு நாதன் கரந்தை வெற்பின்
மேல் வாய்த் திருந்த வெழுத்தா றரிதின் விளங்கு'மென்றே
நூல் வாய்த்த நுண்ணிடை யீர்மறைத் தீரணி நோக்கினையே."

பால் வாய்ப் பசுந் தமிழ் — சீகாழிப் பிள்ளையாரது பாலறா வாயினின்றும் தோன்றிய பசிய தமிழ்ப் பாவாகிய தேவாரம். இது வைகைக்கு அடை. பால் வாய் என்ற தனுல் குழவியின் வாய் என்பது தோன்றிற்று. எழுத்தாறு—ஆறு மெழுத்து. அது ஊ என்பதாம். ஊ = இறைச்சி. அரிது — சிறிது. கண் ஊனுலாகியதாகலின் இங்ஙனம் கூறினர் போலும். பின்னடிகளின் பொருள் சரியாகப் புலப்படவில்லை.

"ஆவியும் பூவும் தகரமும் தேனு மணிந்து நறு
நாவியும் சேர்குழலீர் தளவாய்ரகு நாதன் வரைக்
காவியங் கைபுனைந்தீர் விடுத்தீர்தனங் கஞ்ச மலர்த்
தேவியும் போலநின் றீர் விருப்பேதுங்கள் சிந்தனைக்கே."

ஆவி—புகை. காவி அம்கை புனைந்தீர் — காவி மலர் போன்ற கண்ணைக் கையாற் புனைந்தீர்; மூடினீர் என்றபடி. தனம் — முலை. கஞ்சமலர்த் தேவி — இலக்குமி. காவியைப் புனைந்தீர்; செல்வத்தை விடுத்தீர்; அழகால் இலக்குமி போலவு நின்றீர்; உமக்கு இல்லறமோ துறவறமோ. யாது? விருப்பு என்பதுந் தோன்றிற்று.

"வாவிக்கு ளொற்றை வசனமென்றேதுமை வானிலங்குங்
காவிச் செழுங்குடை யான்ரகு நாயகன் காவிரிநாட்
டாவிக் குயிர் தந்த கோட்டீர் தொழுதன மப்படிநீர்
சேவிக்க நல்குங் கமலாலய மூத்தி சித்திக்கவே."

வாவிக்குள்ளே தோன்றும் ஒற்றைத் தாமரை மலர் என்று சொல்லும் காவிக்குடையன் என்க. மைவான் — மேகம் பரந்தவான். வான், வாவிக்குவமை. மை, இலைக்குவமை. கோட்டீர் என்பதில் கோடும், கமலாலயம் என்பதில் கமலமும், முறையே கோடு போன்ற முலையையும், கமல மலர் போன்ற கண்ணையுமுணர்த்தின. இனிக் கோட்டீரைத் தொழுதாம் கமலாலயத்தையும் காட்டு என்பதுந் தோன்றிற்று. ஊர் கோடு என மாற்றித்தனத்துக்குப் பொருள் கொள்க. ஊர்தல் — பரத்தல். கமல ஆலயம் — கமலப் பூவின் தன்மைக் கிடமாயது. என்றது கண்ணை,

"சங்கே கொடைத்தருவே யென வாழ்வு தருங் கருட
வெங்கே தனத் தள வாய்ரகு நாயகன் வீரை சுற்றும்
பங்கே ருகத் தனமே யொளி சேர்தன பாரமலை
யிங்கே யிருக்கக் கடலே றிைைறன் னிறை யவரே"

சங்குந் தருவும் போல வாழ்வு தரும் கேதனத்தான் என்க. கருட கேதனம் — கருடக் கொடி. பங்கேருகத் தனமே என்பது விளி. தனமாகிய பார மலை.கடல்— கடல் போன்ற கண். இறையவர் — கை, திரவிய மலை இங்கே யிருக்கத் தலைவர் கடலேறினர் என்னை? என்பதுந் தோன்றிற்று.

"கன்னித் திரைச்சங்கு மிப்பியு மீனுங் கராவு மொளிர்
நன்னித் திலஞ்சொரி தேவையர் கோன்ரகு நாதன் வெற்பின்
மின்னிற் சிறந்த மின்னே கரிக்கோட்டு வெண்முத் திருக்க
மன்னித் திகழ் கஞ்ச முத்தமென்னே கைவளை கின்றதே."

கரிக் கோட்டு வெண் முத்து—யானைக் கோடு போன்ற முலையின் கண் உள்ள வெள்ளிய முத்துமாலை. முத்தம்—முத்து என்ன நின்றது. கஞ்ச முத்தம் — தாமரை மலர் போலுங் கண் முத்தம்! முத்தம், முத்தமிடுதல்; எனவே மறைத்தல் என்பது பொருள். இனி யானைக் கோட்டு முத்திருக்க தாமரை முத்திலே கை வளைகின்றது என்னை? என்பதுந் தோன்றிற்று. வளைதல் என்பது பாடமாயின் புனைதல் என்று பொருள் கொள்க.

"போரயி ஞகம் புலிசிலை வான் வெம்பொறி வழங்கு
மாரெயில் வீரையர் கோன்ரகு நாத னணி வரைக்கு
ணீரணுகிய மைவேலை கைக் கொண்ட நேரி ழையீர்
போரணுன கிரிதுர்க்க நீக்குதல் பெண் புத்தியே"

அயில் — வேல். நாகம் — பாம்பு. சிலை — வில் இவை போலச் செய்யப்பட்ட பொறி. மை வேலை — கரிய கடல் போன்ற கண். கிரிதுர்க்கம் — மலைபரன் என்றது அது போன்ற முலையை. இனி நீராணுகிய கடலைக் கைக் கொண்டநீர் மலையரணை நீக்கல் பெண் புத்தி என்பதுந் தோன்ற நின்றது.

"முள்ளார் வெங்கானந் திரை வரை வானமுகடு சென்று
நள்ளார் புகவெஞ் சிலை குனித் தோன் ரகுநாதன் வரைக்
கள்ளார் கருங்குழலீர் கொடுங் கூற்றையும் கையமைத் தீர்
புள்ளார் தமை விலக் கீரெமைவாழப் புரக்கிலின்றே."

கூற்று —கூற்றுப் போன்ற கண். புள்ளார் —சக்கரவாகம் போன்ற முலை. இயமனையும் கையமைத்தாய் அது போலப் பகை வரையும் விலக்கீர் எம்மைப் புரக்கின் என்பதுந் தோன்றிற்று. புல்லார் புள்ளார் என நின்றது என ஒற்றுமை பற்றி.

"போற்றுங் கமடம் பணிகுல நாகம் பொறுத்த சுமை
யாற்றும் புயவரை யான்ரகு நாத னணிவரையீர்
தோற்றுங் கயலை மறைத்தீர் பொற்கஞ்சமுந் தோற்று வித்தீர்
சாற்றும் பொழுதினி னீரோ மதுரைத் தடம் பொய் கையே"

கமடம்—ஆமை. பணி குலநாகம் —பணி குலத்திற் பிறந்த சேஷனுகிய நாகம். பணியும் குல நாகமுமாம். கயல்— கயல் போன்ற கண். பொற்கஞ்சமுந் தோற்று வித்தீர் — பொற்றாமரை போன்ற முலைகளையுந் தோற்று வித்தீர். ஆதலால் நீரே பொற்றாமரைவாவி என்பதுந் தோன்றிற்று.

"நறை பெற்ற மாலைக்கதிர் வேலுமாலு மெந்நாளுஞ் செவ்வி
யுறைபெற்ற தேவை ரகுநாதன் வெற்பி லென்னுள்ள மெனுங்
குறை பெற்ற தாருவை மைந்நீலவண்டு குடைந்துதிரா
திறை பெற்ற போதகைத் தீர்வந்து சாய்க்கு மிபக்குன்றமே."

நறை பெற்ற மாலையை அணிந்த ஒளி பொருந்திய வேலும் மேகமும் எந்நாளும் அழகிய உறை பெற்ற தேவை என்க. வேல் உறை பெறல் — உறையைப் பெறுதல். மேகம் உறை பெறல் — துளியைப் பெறுதல். குறை பெற்ற தாரு — இன்றியமையாத தாரு மேலான தாரு. வண்டு—வண்டு போன்ற கண். இறை பெற்ற போது-கை. இபக்குன்றம் —யானையாகிய மலை. அதுபோலும் முலை என்றவாறு. இனித் தாருவை வண்டு குடைந்துதிராமல் அமைத்தீர்; அதனை யானை சாய்க்கும் என்பதும் தோன்ற நின்றது.

"திரை யோங்கு பாற்கடற் பூந்தாமரைச் செழுந் தேனிருக்கும்
வரை யோங்கு மார்பன் ரகுநாதன் றேவை மணிவரை மேல்
விரை யோங்கு பங்கயந் தாங்கிய நீரிரு வெற் பொளித்தா
லுரையோங்குவிண்மணி யெண்மணி னீரென்றுரை செய்வரே."

பூந்தாமரைச் செழுந்தேன் — திருமகள். பங்கயம் — தாமரை மலர் போன்ற கண். இரு வெற்புப் போன்ற முலையையும் ஒளித்தால் உம்மைத் தண்ணீர் என்று சொல்லுவார்கள். விண் மணி — தேவ மணியே! இயல் புவிளி. எண் மண்ணில் சொல்லுவர் என்க. வெற்பிருத் தலால் நீரென்று சொல்லார். வெற்பை ஒளித்து விட்டால் நீர் என்று சொல்லுவர் என்பது கருத்து. நீர் என்று சொல்லுதற்குக் காரணம் பங்கயந்தாங்கி யிருத்தல்.

"மதிசேரமுத விதழியஞ் சீதள வாச வைகை
நதிசேர் தெளிபுனல் வீரையர் கோன்ரகு நாதன்வரைப்
பதிசேரிளமுலை சங்கிலி காட்டும் பணியணிந்தாய்
துதிசேர்பரவையுங் காட்டிலென் போலில்லை சுந்தரனே."

மதிசேர் அமுதத்தின் சீதளத்தையும் இதழியின் வாசத்தையு முடைய வைகை. சிவன் தன் சடாமுடியில் வைத்துச் சுமந்த மண்ணாலடைக்கப்பட்ட வைகை என்பதுந் தோன்ற இங்ஙனம் கூறினர். இள முலை — விளி. சங்கிலி காட்டும் பணி — சங்கிலி போன்ற ஆபரணம். அணிதல் — முலையிலணிதல். பரவை — கடல் போன்ற கண். இனிச் சங்கிலி யென்னும் பெண்ணைக் காட்டுந் தொழிலமைந்தாய் பரவை என்னும் பெண்ணையுங் காட்டினால் என்னைச் சுந்தரமூர்த்தி நாயனர் என்பேன் என்பதுந் தோன்றிற்று.

"ஆடகமாமதில் வீரையர் கோன் வண்டலம்பு முல்லை
யேடலர் மாலிதையான்ரகு நாயக னேமவெற்பில்
சூடகமேவுகைக் கொண்டீர் குவலயந் தோகையன்னீர்
கூடலை வேண்டிவந்தே னளித்தீர் பரங் குன்றினையே."

ஆடகம்-பொன். ஏடு-இதழ். சூடகம்-வளை. குவலயம் —குவளை போன்ற கண். குன்று — மலை போன்ற தனம். இனிக் குவலயத்தை (பூமியை)க் கைக் கொண்டீர். மதுரையை வேண்டி வந்தேனுக்குப் பரங்குன்றைத் தந்தீர் என்பதுந் தோன்றிற்று.

"கங்கமுஞ் சீனமுஞ் சோனகநாடுங் கலிங்கமும்போர்
வங்கமுஞ் சேர்முன்றி லான்ரகுநாதன் மணவை வரைச்
சிங்கமுஞ் சாய வருகரிப்போரி லென் சிற்றுயிரு
மங்கமுந் தேய்வது பார்த்திரங்காத தென்னரணங்கே."

சிங்கம் —சிங்கம் போன்ற இடை. கரி—யானை போன்ற தனம். தெய்வமே யானைப் போரில் என் உயிரும் உடம்புந் தேய்வதைப் பார்த்து இரங்கா தொழிந்தீர் என்பதுந் தோன்றிற்று.

"நூலுந்துடியுங் கொடிமின்னு நாகமு நுண்மதியும்
போலுந் தளரிடையாய் ரகுநாதன் புனற் காந்தைச்
சேலுங் கமலமுங் காவிபு மாவுந் தெவ்வேந்தை வென்ற
வேலும் பொருவும் விழியை யெந்நாட் கண்டு மேவுவனே."

மதி —புத்தி. மா — வண்டு. மாம் வடுவுமாம்.

"மல்குங்கிரண மணி செம்பொன் வாரி மருங்கிருபா
னல்குந்திரை நைநை நாதனெங்கோன் ரகுநாதன் முறை
புல்கும் பதியில் விசும்பிடை நீண்டு புகுதருமீ
னெல்குந்துடியிடை தோற்றுதென்றோவின் றொளிக்கின்றதே"

விசும்பிடை நீண்டு புகுதருமீன் —சேணிடத்து நீண்டு செல்லுகின்ற மீன் போலுங் கண். மீனினை ஒளிக்கின்றது, விசும் பிடை நீண்டு புகுதரு மீன் பதியில் தோன்று தென்றோ? என்க. நீண்டுபுகுதருமீன்—எரிமீன். துடியிடை — விளி.

(தொடரும்)

# உடலுயிர்ச்சம்பந்தம்.

(தொகுதி 2. 44-ம் வாரத் தொடர்ச்சி.)

அகத்தியர் போன்ற தத்துவப் பெரியாரே தமிழ் இலக்கணத்தின் அருமை பெருமையை அறிய வல்லராவர்.

இலக்கண நூல் எதற்காக ஏற்பட்டது? இலக்கண நூல் தான் வேதம்.

அஃதாவது வேத சாரங்களை — வேத உண்மைகளை விளக்கும் நூல் என்பது.

தமிழ் இலக்கணமே வேதாந்த சித்தாந்த இலக்கணம்.

இலக்கண நூல்களைக் கொண்டுதான் பதி, பசு, பாசங்களை எளிதில் அறிதல் கூடும். பூரணப்பட்ட இலக்கண நூல் இல்லாமல் இவற்றை யாவரும் இனிதின் உணருமாறு விளக்கிக் காட்டுதல் முடியாத காரியமே.

பூரணப் பட்ட இலக்கண நூல் யாது? பதி, பசு, பாச லட்சணங்களை உள்ளவாறு அறிந்து கொள்வதே வேண்டற்பால கல்வியாகும்.

"வேண்டிய கல்வி ஆண்டு மூன்றி கவாது"

என்பது தொல் காப்பியம். (பொருள்) இவ்வாறு உவமான முகத்தால் உடலுயிர்களின் அந்நியோந்நிய சம்பந்தம் நன்கு புலப்படுதல் கண்டு கொள்க.

உயிர் என்ற போதே மெய் உண்டு. மெய் இல்லை யாயின் உயிரும் இல்லை. மெய் போனால் உயிர்போனது.

## திருவாசகம்.

"........நறுமலர் எழுதரு நாற்றம் போல் பற்றலாவ தோர் நிலையிலாப் பரம் பொருள்............"

(ஷை அதிசயப் பத்து. செ. 9.)

என்பதனால் பூவின்றி நாற்ற மில்லை; பூ வாடிப் போனால் நாற்றம் போய் விடும் என்பது பெறப்படுகின்றது.

இது போல சரீரம் செத்துவிட்டால் உயிரும் செத்துவிட்டது என்பது புலப்படும்.

"உடம் பார் அழியின் உயிரார் அழிவர்"

என்னும் திரு மூலர் திருவாக்கின் உண்மைப் பொருள் இதுவே என அறிக.

## அப்பர் தேவாரம்

"வந்தவாறெங்ஙன் போமாறேதோ மாய மாம் இதற்கேதும் மகிழ வேண்டாம்"

எனவும்,

## திருவாசகம்.

"..........யாமார் எமதார் பாசமார் என்ன [மாயம்..............."

(ஷை யாத்திரைப் பத்து. செ. 3.)

எனவும், வரும் திரு வாக்குக்களையும் நோக்குக.

உடல் செத்த போது உயிரும் செத்ததாயின், மறு சென்மம் உளதாவது எப்படி எனின், அவ் விஷயம் ஒரு சிறிது கூறப்படும்.

உடல் உயிர் என்பன இயக்கத்தோடு இருக்கும் போதே மறு பிறப்புக்கு வித்தான கர்மங்களைச் செய்து கொண்டே இருக்கின்றன என்பது எவராலும் மறுக்க முடியாதது. இதற்குக் காரணம் அவா.

## குறள்.

"அவாவென்ப எல்லா உயிர்க்கும் [எஞ்ஞான்றும்
தவாப் பிறப்பீனும் வித்து."

(ஷை 37. அதிஅவாவறுத்தல். செ. 1)

என்பது பொய்யா மொழி.

வினைப் போகமே தேகம். இருவினை சொரூபமே உடலுயிர் சொரூபம்.

"ஊசலாட்டு மிவ் வுடலுயிராயின இருவினை"

என்பது திருவாசகம்.

வினை ஒழிந்ததும் அஃதாவது ஒரு தேகத்துக் கென்றே போகமாக ஏற்பட்ட பிராரத்த வினை ஒழிந்ததும் அத் தேகம் செத்துப்போம்.

"வினைப்போகமேஉறுதேகங்கண்டாய்
வினைதான்ஒழிந்தால்தினைப்போதளவு [நில்லாது"

என்பது பட்டினத்தடிகள் திருவாக்கு.

முன்னாகவே பல சென்மங்களுக்கு

(5.-பக்கம் பார்க்க.)